*Damages caused to lakes by rain*

***1198 Q.**—**Sri M. P. SARATHI** : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீப பருவ மழையினல் எத்தனை ஏரிகள், குளங்கள், எங்கெங்கு சேதமடைந்தன ?

(இ) மழைக் காலத்தில் ஏரிகளை ஏரியாக கண்காணிக்க என்ன ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) A statement [a] is laid on the table of the House.

**Sri M. P. SARATHI:** ஸார், இராமநாதபுரம் மாவட்டத்தில் 436 ஏரி களில் உடைப்பு ஏற்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவைகள் எல்லாம் இப்போது என்ன நிலைமையில் இருக்கின்றன ? அவைகள் சீர்படுத்தப் பட்டதா என்பதையும் அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** உடைந்த ஏரிகளையெல்லாம் ரிப்பேர் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறோம். ஒருசில இடங்களில் பெரிய உடைப்பு ஏற்பட்டிருந்தால், அவைகளுக்கு ரிவெட்மெண்ட் போட்டு, தண்ணீரைத் தேங்கவைத்து, வெயில்காலத்தில் செப்பனிட அரசாங்கம். ஏற்பாடு செய்திருக்கிறது.

**Sri R. SRINIVASA IYER :** தஞ்சாவூரில் சில ஏரிகள் உடைந்த நிலையில் இருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் சங்கரநாராயண ஏரி உடைந்து போய்விட்டது. அது தவிர சப்ளை சானல்கள் மூன்று இடங் களிலே உடைந்துபோய்விட்டன. அவைகள் ரிப்பேர் செய்யப்பட்டு விட்டனவா ? சப்ளை சானல்களை உடனடியாக ரிப்பேர் செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN :** எங்கு உடைப்பு ஏற்பட்டாலும் அவைகளை ரிப்பேர் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கனம் அங்கத் தினர் அவர்கள் கூறும் ஏரி சம்பந்தமான தகவல் இப்போது என்னிடம் இல்லை.

**Sri K. VINAYAKAM :** சென்னைக்கு அருகாமையில் உள்ள செம்பரம்பாக்கம் ஏரி உடைப்புகளைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்றால், "like a democles sword always hanging on a person" என்று சொல்லலாம். எப்போது மழை பெய்கிறதோ, அப்போதெல்லாம் உடைந்து விடுகிறது. அதன் விளைவாக சென்னை நகரத்திற்குள்ளே தண்ணீர் வந்து விடுகிறது என்ற ஒரு அபாயமும், பயமும் காணப்படுகிறது. ஆகவே அதற்கும் ரிவெட்மெண்ட் போட்டு, பலப்படுத்துவதற்கு முயற்சி எடுக்கப் படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** செம்பரம்பாக்கம் ஏரிக்கு ஏற்கனவே ரிவெட்மெண்ட் போடப்பட்டு இருக்கிறது. இப்போது எந்தவித மான ஆபத்தும் வராது என்று அரசாங்கம் கருதுகிறது. அதல்லாமல் அங்கு ஸ்பெஷல் ஸ்டாப் போடப்பட்டு, ஆபத்து ஏற்படாமல் செய்வதற்கு அங்கு அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Rural Housing Scheme (details)*

*** 1199 Q.**—**Sri A. VEDARATHNAM:** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஜாகை வசதிக்காக ஒதுக்கிய தொகை எவ்வளவு ?

(இ) இதுவரை எத்தனை வீடுகள் எவ்வளவு செலவில் கட்டப்பட் டிருக்கின்றன ?

(உ) திட்ட காலத்திற்குள் ஒதுக்கிய தொகை பூராவும் பயன்படுத்திக் கொள்ள என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

---

[a] Printed as Appendix V on pages 529–530 infra.

30th March 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The Rural Co-operative Housing Scheme is not included in the Second Five-Year Plan. A sum of Rs. 15 lakhs was set apart for the Scheme from State funds during the Second Plan period.

(இ) Up to 31st January 1961, 306 houses were constructed at a total cost of Rs. 13·16 lakhs.

(உ) Out of the total provision of Rs. 15 lakhs made for the Second Plan period, a sum of Rs. 13·16 lakhs has been utilised up to 31st January 1961. As the balance of Rs. 1·84 lakhs was found to be inadequate to meet the demands of Rural Housing Societies during the remaining period, additional provision is included in the Budget.

SRI A. VEDARATHNAM : ரூரல் அவுசிங்குக்கு மத்திய அரசாங்கம் உதவி செய்வதில்லையா ? இந்த இனத்தில் நாம் முயற்சி செய்யாததால் உதவி கொடுக்கப்படவில்லையா ? அல்லது கேட்டும் அவர்களுக்குக் கொடுக்க இஷ்டமில்லையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : வில்லேஜ் அவுசிங் பிராஜக்ட் இருக்கிறது. அதற்கு மத்திய சர்க்கார் உதவியிருக்கிறது. ரூரல் அவுசிங் சொஸைடி என்று நாம் கூட்டுறவு சொஸைடிகள் ஏற்படுத்தி அவைகள் மூலம் சில வசதிகளைச் செய்து வருகிறோம். ஆகவே ரூரல் அவுசிங் சொஸைடி என்பது ஒன்று ; வில்லேஜ் அவுசிங் பிராஜக்ட் என்பது மற்றொன்று.

SRIMATHI A. S. PONNAMMAL : தலைவர் அவர்களே, இந்த வில்லேஜ் அவுசிங் பிராஜக்ட் என்பதற்கு மத்திய அரசாங்க உதவி இருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அப்படி இருந்தால், அது எந்த அளவில் இருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும் இருந்தாலும் கூட இந்த வில்லேஜ் அவுசிங் பிராஜக்டுக்கு அரசாங்கம் 50 சதவிகிதம் உதவி செய்கிறது. 50 சதவிகிதம் கிராமத்திலுள்ளவர்கள் கொடுக்கவேண்டும். இப்படி இருக்கின்ற காரணத்தினால் அதைப் பயன்படுத்திக்கொள்ள கிராம மக்கள் முன்வரவில்லை. நமது ராஜ்ய சர்க்கார் இந்த 50 சதவிகிதம் என்பதை நம்முடைய கூட்டுறவு இலாகாவின் மூலமாக மேற்கொண்டு 30 சதவிகிதம் கொடுத்து, மொத்தத்தில் 80 சதவிகிதம் உதவித்தொகை கொடுத்து உதவி செய்கிறோம். இது கடந்த ஒரு ஆண்டு காலமாக கொடுத்துக்கொண்டு வரப்படுகிறது.

## *Retail price of rice*

* 1200 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. Minister for Home be pleased to place a statement detailing the retail price of rice for each month from January to December 1960 in the different centres of our State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement [a] showing the retail price of rice for each month from January to December, 1960 in the different centres of our State is placed on the table of the House.

---

a Printed as Appendix VI on page 531 infra.